ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2016 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தரப்) பரீட்சை, 2016 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2016

ක්‍රිස්තියානි ශිෂ්ටාචාරය I
கிறிஸ்தவ நாகரிகம் I
Christian Civilization I

49 T I

පැය දෙකයි
இரண்டு மணித்தியாலம்
Two hours

**அறிவுறுத்தல்கள் :**

* **எல்லா** வினாக்களுக்கும் விடை எழுதுக.
* விடைத்தாளில் தரப்பட்டுள்ள இடத்தில் உமது **சுட்டெண்ணை** எழுதுக.
* விடைத்தாளின் மறுபக்கத்தில் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களைக் கவனமாக வாசித்துப் பின்பற்றுக.
* **1** தொடக்கம் **50** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றுக்கும் (1), (2), (3), (4), (5) என இலக்கமிடப்பட்ட விடைகளில் **சரியான** அல்லது **மிகப் பொருத்தமான** விடையைத் தெரிந்தெடுத்து, **அதனைக் குறித்து நிற்கும் இலக்கத்தைத் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களுக்கு அமைய** விடைத்தாளில் **புள்ளடி** (×) இடுவதன் மூலம் காட்டுக.

**1.** பலஸ்தீனாவில், 'சாரோன்' என்ற இடம் அமைந்துள்ளது
(1) கடல் ஓரத்திலாகும். (2) தென் மலைப்பகுதியிலாகும். (3) கிழக்கு மலைப்பகுதியிலாகும்.
(4) சமாரியாவிலாகும். (5) கலிலேயாவிலாகும்.

**2.** 'அபிஷேகம் செய்யப்பட்டவர்' என்பது முதன் முதலில் வழங்கப்பட்டது
(1) ஆபிரகாமிற்கு (2) மோசேக்கு (3) அரசர்களுக்கு
(4) இசையாவிற்கு (5) அரசர் சைரஸ்சிற்கு

**3.** பழைய இஸ்ராயேலில் முடியாட்சி அமைக்கப்பட்டமைக்கான காரணமாகக் கருதப்பட **முடியாதது,**
(1) நீதித்தலைவர்கள் நீதியை நிலைநாட்டத் தவறியமை
(2) அண்மை நாடுகள் அரசர்களால் ஆளப்பட்டமை
(3) இஸ்ரயேலர்களின் தனித்துவம் பேணப்பட்டமை
(4) போர்களில் வெற்றி பெறுவதற்கு ஓர் அரசன் தேவைப்பட்டமை
(5) தாவீது அரசனின் போர்த்திறன்

**4.** யூத கலாசாரத்தில் செல்வாக்குச் செலுத்திய பழைமையான இரு பெரும் நாகரிகங்கள்
(1) ஐரோப்பிய நாகரிகமும் சிந்துவெளி நாகரிகமும்
(2) சீன நாகரிகமும் யூப்பிரத்தீஸ், தைக்கிறிஸ் நாகரிகமும்
(3) இலத்தீன் அமெரிக்க நாகரிகமும் நைல் நதி நாகரிகமும்
(4) நைல் நதி நாகரிகமும் யூப்பிரத்தீஸ், தைக்கிறிஸ் நாகரிகமும்
(5) ஆபிரிக்க நாகரிகமும் ஐரோப்பிய நாகரிகமும்

**5.** பின்வருவனவற்றுள் நைல் நதி நாகரிகம் பற்றிய **பொருத்தமற்ற** கூற்றைத் தெரிவுசெய்க.
(1) நைல் நதியானது ஆபிரிக்காவின் விக்டோரியா ஏரியில் ஆரம்பித்து, எகிப்து ஊடாகப் பாய்ந்து மத்திய தரைக்கடலில் சங்கமமாகின்றது.
(2) நைல் நதி நாகரிகத்தில் பப்பிரஸ் என்னும் புல் எழுதுவதற்குப் பயன்படுத்தப்பட்டது.
(3) மரணத்தின் பின் வாழ்வு உண்டு என்னும் நம்பிக்கை முதன் முதலில் நைல் நதிக்கரை மக்களிடமே ஆரம்பமாகியது.
(4) இந்த நாகரிக மக்கள், ஆட்சி அதிகாரம் மக்களிடமிருந்தே அரசனுக்குக் கிடைத்ததாக நம்பினர்.
(5) பிரமிட் கல்லறைகள் மரணத்தின் பின் வாழ்வு உண்டு என்பதன் அடையாளமாகும்.

**6.** கிரேக்க நாகரிகம் பற்றிய பின்வரும் கூற்றுகளைக் கருத்திற் கொள்க.
A - மனித சமூகத்தின் மேம்பாட்டிற்குப் பங்களிப்புச் செய்த நாகரிகங்களில் கிரேக்க நாகரிகம் முதன்மையானது.
B - கிரேக்க நாகரிகம் கிறிஸ்தவ நாகரிகத்தில் செல்வாக்குச் செலுத்தவில்லை.
C - உரோமைப் பேரரசில் கிரேக்க மொழி பேசப்பட்டமை, பேரரசு முழுவதிலும் கிறிஸ்தவம் வேகமாகப் பரவுவதற்குக் காரணமாகியது.
D - கிரேக்க நகரிகம் 'ஹெல்லனிசம்' எனவும் அழைக்கப்பட்டது.
E - 'செப்துவாஜிந்து' என்னும் மொழி பெயர்ப்பு ஏதென்ஸ் என்னுமிடத்தில் செய்யப்பட்டது.

மேலுள்ளவற்றுள் சரியான கூற்றுக்கள்,
(1) A, B, C (2) A, B, D (3) A, C, D (4) B, C, E (5) C, D, E

**7.** சவுல் இறைவனால் புறக்கணிக்கப்பட்டமைக்கான காரணம், அவர்
(1) தாவீது அரசனுக்குத் தொல்லை கொடுத்தமை
(2) பல மனைவிகளை வைத்திருந்தமை
(3) பென்சமின் குலத்திற்கு முன்னுரிமை வழங்கியமை
(4) அமலேக்கியருடனான போரில் இறைவனுக்குக் கீழ்ப்படியாமை
(5) இஸ்மாயலருடனான போரில் இறைவனுக்குக் கீழ்ப்படியாமை

**8.** யாருடைய தவறின் காரணமாக பழைய இஸ்ராயேல் வட அரசு, தென் அரசு எனப் பிரிந்தது?
(1) சவுல் அரசர் (2) தாவீது அரசர் (3) செடக்கியா அரசர்
(4) றெகபோவாம் அரசர் (5) ஆகாஸ் அரசர்

**9.** பின்வருவனவற்றுள் கிரேக்கர் இஸ்ராயேலை ஆட்சி செய்த காலத்தில் **இடம்பெறாத** விடயம்
(1) பல நகரங்களின் பெயர்கள் கிரேக்கப் பெயருக்கு மாற்றப்பட்டமை
(2) விளையாட்டு அரங்கங்கள் கட்டப்பட்டமை
(3) யூதர்கள் கிரேக்க மருத்துவ முறைகளைப் பின்பற்றியமை
(4) கிரேக்கருக்கு எதிராக, யூதர்கள் பேசியரின் ஆட்சியை மீள ஏற்படுத்த முயன்றமை
(5) சில கிரேக்க பழக்க வழக்கங்கள் பின்பற்றப்பட்டமை

**10.** 'மக்கபே' என்னும் சொல்லின் பொருள்
(1) மீட்பை எடுத்துரைப்பது (2) இவர் வழியாக இஸ்ராயேலர் மீட்பு பெறுவர்
(3) அபிஷேகம் செய்யப்பட்டவர் (4) நித்திய மீட்பர்
(5) ஆண்டவரே கடவுள்

**11.** 'மெசியா' என்னும் பதத்தின் சொற்பிறப்பு
(1) மீட்பர் (2) இறுதிக்காலத்தில் வருபவர் (3) ஆண்டவரின் நாளில் வருபவர்
(4) அபிஷேகம் செய்யப்பட்டவர் (5) அரசர்

**12.** எகிப்திய அடிமைத்தனத்தின் பின் இஸ்ரயேலர் ஆக்கிரமிப்பாளர்களால் ஆளப்பட்டனர். இவ் ஆக்கிரமிப்பாளரின் ஆட்சியைக் கால ஒழுங்கில் கொண்ட தொகுதி
(1) கிரேக்கர், பேசியர், உரோமையர் (2) பெலிஸ்தியர், பேசியர், கிரேக்கர்
(3) பேசியர், கிரேக்கர், உரோமையர் (4) பேசியர், அசீரியர், உரோமையர்
(5) பேசியர், ஆமேனியர், உரோமையர்

**13.** "கிறிஸ்து திருச்சபையை அன்பு செய்வது போல் கணவர்களே உங்கள் மனைவியரை அன்பு செய்யுங்கள்" எனும் கூற்று இடம்பெற்றுள்ளது
(1) மத்தேயு நற்செய்தியில்
(2) யோவான் நற்செய்தியில்
(3) தெசலோனிக்கேயருக்கு எழுதிய முதலாவது திருமுகத்தில்
(4) திமோத்தேயுவுக்கு எழுதிய முதலாவது திருமுகத்தில்
(5) எபேசியருக்கு எழுதிய திருமுகத்தில்

**14.** ஆரம்பக்கிறிஸ்தவர்கள் 'மரணத்தா' என்னும் பதத்தால் வெளிப்படுத்துவது யாது?
(1) எங்கள் அன்றாட உணவைத் தாரும் (2) நித்திய வாழ்வின் சம்பாவனை
(3) வாரும் ஆண்டவராகிய இயேசுவே (4) தூய ஆவியே வாரும்
(5) தூய திரித்துவமே வாரும்

**15.** புனித பவுல் தமது இரண்டாம் தூதுரைப் பயணத்தை ஆரம்பித்த இடம்
(1) எருசலேம் (2) உரோம் (3) அந்தியோக்கியா
(4) தெசலோனிக்கேயா (5) கொரிந்து

**16.** 'பெரியாக்கோன்' (Periarchon) எனக் கிரேக்க மொழியில் கூறப்படும் 'அடிப்படைகள்' என்னும் நூலின் ஆசிரியர்
(1) புனித இரேனியுஸ் (2) ஒரியன் (3) புனித அத்தனாசியுஸ்
(4) புனித பசில் (5) புனித நிஸ்ஸா கிரகோரியார்

**17.** மிலான் சாசனம் தொடர்பான **தவறான** கூற்றைத் தெரிவு செய்க.
(1) ஆயர்களின் அதிகாரம் ஏற்றுக்கொள்ளப்பட்டு அரசுடைமையாக்கப்பட்ட சொத்துக்கள் மீண்டும் வழங்கப்பட்டன.
(2) திருத்தந்தைக்கு லத்தரன் அரண்மனையும் உபகாரச் சம்பளமும் வழங்கப்பட்டது.
(3) ஞாயிறு பொது விடுமுறை தினமானதோடு, அன்றைய தினம் ஊதியம் பெறும் வேலைகள் செய்வது தடைசெய்யப்பட்டது.
(4) கிறிஸ்தவர் அல்லாதோருக்கு மத உரிமை மறுக்கப்பட்டது.
(5) குருக்கள் வரி செலுத்துவதிலிருந்து விதிவிலக்களிக்கப்பட்டனர்.

**18.** ஆரம்ப காலக் கிறிஸ்தவர்கள் பயன்படுத்திய சில அடையாளங்களும் அவை குறிக்கும் பொருள்களும் கீழே தரப்பட்டுள்ளன. அவற்றுள் அடையாளத்தின் பொருள் **பிழையாகக்** குறிப்பிடப்பட்டுள்ள விடையைத் தெரிவுசெய்க.
(1) மயில் - நித்திய வாழ்வு (2) புறா - ஆன்மா (3) மீன் - கிறிஸ்து
(4) சிலுவை - கிறிஸ்தவ விசுவாசம் (5) தோளில் ஆட்டுடனான இளைஞன் - நல்ல ஆயன்

[பக். 3 ஐப் பார்க்க

**19.** கிறிஸ்தவ ஆச்சிரம வாழ்வு நிறுவப்பட்டமைக்கான முக்கிய காரணம்
(1) உலகியல் போக்கிலிருந்து விடுபடுவதற்கு ஆச்சிரம வாழ்வு சிறந்த வழியாகும்.
(2) உலகியல் வாழ்வு பாவத்திற்கு இட்டுச் செல்லக் காரணமாகலாம்.
(3) கலாபனை முடிவுற்றதால் இரத்த சாட்சியத்தால் கிறிஸ்தவ வாழ்விற்குச் சான்று பகர முடியாத நிலை ஏற்பட்டமை.
(4) புனித நிலையை அடைவதற்கு ஆச்சிரம வாழ்வு இலகுவான வழியாகக் காணப்பட்டமை
(5) பிரபலம் அடைவதற்குத் துறவு வாழ்வு ஒரு வழியாகக் கொள்ளப்பட்டமை

**20.** பின்வரும் கூற்றுகளைக் கருதுக.
A - முழு நாளும் மௌனம் பேணுதல்
B - நீண்ட நேரம் செபத்தில் செலவிடல்
C - எப்போதும் சமயம் பற்றிய பொது உரையாடல்களை நடத்துதல்
D - நோன்பைக் கடைப்பிடித்தல்
E - தினமும் திருப்பலியில் பங்கு கொள்ளல்
மேலுள்ளவற்றுள் ஆரம்பகால ஆச்சிரம வாழ்வின் பண்புகளாகக் கருதக்கூடியன,
(1) A, B, D (2) A, C, E (3) B, C, D (4) B, D, E (5) C, D, E

**21.** 'மறை சாட்சிகளின் இரத்தமே கிறிஸ்தவத்தின் வித்து' எனக் குறிப்பிட்டவர் யார்?
(1) புனித கிளமென்ற் (2) தேர்த்தூலியன் (3) ஒரியன்
(4) புனித அம்புரோசியார் (5) புனித யஸ்ரின்



**22.** பின்வரும் கூற்றுக்களைக் கருதுக.
A - இத்தாலியில் புளோறன்ஸ் என்னும் இடத்தில் பிறந்தவர்.
B - இத்தாலிய மொழியில் தமது ஆக்கங்களை எழுதினார்.
C - 'கிறிஸ்து வழி வாழ்வு' என்னும் நூலின் ஆசிரியர் ஆவார்.
D - புகழ்பெற்ற இறையியலாளர் ஆவார்.
E - 'த டிவயின் கொமடி' (The Divine Comedy) என்னும் நூலை எழுதினார்.
மேலுள்ளவற்றுள் அலிகியேரி டான்டே பற்றிய சரியான கூற்றுக்கள்
(1) A, B, C (2) A, B, E (3) B, C, D (4) B, D, E (5) C, D, E

**23.** பின்வரும் கூற்றுக்களைக் கருத்திற் கொள்க.
A - இக்கல்லூரியில் விளக்கமளிப்பதற்காக பிளேட்டோவின் மெய்யியல் பயன்படுத்தப்பட்டது.
B - இக்கல்லூரியில் யோவானின் நற்செய்திக்கு முக்கிய இடம் வழங்கினர்.
C - இக்கல்லூரியில் விவிலியத்திற்கு விளக்கமளிக்க உருவக முறையைப் பயன்படுத்தினர்.
D - இக்கல்லூரியை நிறுவியவர் குருவாகிய லூசியின் எனப் பாரம்பரியம் கூறுகின்றது.
E - எருசலேம் சிறில் இக்கல்லூரியின் இறையியலாளர் ஆவார்.
மேற்படி கூற்றுக்களுள் அலெக்சாந்திரிய கல்லூரி பற்றிய சரியான கூற்றுகளாவன,
(1) A, B, C (2) A, B, D (3) A, B, E (4) A, C, E (5) B, C, D

**24.** கார்மேல் சபையைச் சேர்ந்த புனித அவிலா தெரேசாள் பல மடங்களைத் தாபிப்பதற்கு சந்தர்ப்பம் கிடைத்தது
(1) இச்சபையில் முழுநேரம் மௌனம் காக்கப்பட்டமையாலாகும்.
(2) இச்சபையினர் கடுமையான வறுமையில் வாழ்ந்தமையாலாகும்.
(3) இச்சபையினர் மக்கள் மத்தியில் பிரபல்யமாயிருந்தமையாலாகும்.
(4) இச்சபையினர் மிக எளிமையான வாழ்க்கை வாழ்ந்தமையாலாகும்.
(5) இச்சபையின் முதல்வர் அங்கு இடம்பெற்ற சீர்திருத்தத்தைக் கண்டு மகிழ்ச்சி கொண்டமையாலாகும்.

**25.** பின்வரும் இறையியற் சிந்தனையாளர்களைக் கருத்திற் கொள்க.
A - புனித கன்டபெறி அன்சலம்
B - புனித தோமஸ் அக்குவினஸ்
C - புனித பொனவெஞ்சர்
D - புனித ஜோண் மேரி வியான்னி
E - புனித டோமினிக் சாவியோ
இவர்களுள் மத்திய காலத்தில் வாழ்ந்த இறையியற் சிந்தனையாளர்களாகக் கருதப்பட்டவர்கள்
(1) A, B, C (2) A, B, D (3) A, B, E (4) B, C, D (5) C, D, E

**26.** பின்வருவோருள் ஆரம்ப திருச்சபையின் தந்தையர் பட்டியலில் இடம்**பெறாதவர்** யார்?
(1) புனித பெரிய பசில் (2) புனித நான்சியான் கிறகோரியார்
(3) புனித அம்புரோஸ் (4) புனித தோமஸ் அக்குவினஸ்
(5) புனித ஜெரோம்

**27.** பின்வரும் கூற்றுக்களைக் கருதுக.

A - பிரான்ஸ் நாட்டைச் சேர்ந்த இவர் இறையியலையும் சட்டத்தையும் கற்றவர்.
B - அவரது கூற்றின்படி விவிலியம் மட்டுமே விசுவாசத்தின் சட்டமாகும்.
C - மனிதன் தன் சுய மனித உரிமையை இழந்து விட்டதால் இறைவனின் அடிமையாகி விட்டான்.
D - இறைவனால் முன்குறித்து வைத்தோர் மட்டுமே விண்ணகம் செல்வர்.
E - திவ்விய நற்கருணை கிறிஸ்துவின் பலியின் அடையாளமேயாகும்.

இவற்றுள் ஜோண் கல்வின் பற்றிய சரியான கூற்றுக்கள் எவை?

(1) A, B, D (2) A, C, D (3) A, C, E (4) B, D, E (5) C, D, E

**28.** பிரான்சிஸ்கன் சபையின் தொடக்ககால வாழ்க்கை முறையை மீண்டும் வலியுறுத்த புரட்டஸ்தாந்து சீர்திருத்தத்தின் பின்பு நிறுவப்பட்ட சபை

(1) வின்சென்சியன் சபை (2) கார்மேல் சபை (3) கப்புச்சின் சபை
(4) இயேசு சபை (5) சலேசியன் சபை

**29.** பின்வருவனவற்றுள் 'மொசைக்' கலையின் பண்பு **அல்லாதது** எது?

(1) ஓவியம் அழகாகவும் ஒளியூட்டுவதாகவும் இருத்தல்
(2) மனித உருவங்கள் இயற்கையானவையாகத் தென்படுதல்
(3) இயற்கைத் தன்மையை விட கம்பீரத்தன்மைக்கு முக்கியத்துவம் வழங்கப்பட்டிருத்தல்
(4) கண்ணாடித் துண்டுகளால் ஆக்கப்பட்டிருப்பதனால் உருவங்கள் வன்மையானவையாகக் காணப்படுதல்
(5) அணிந்துள்ள ஆடைகளில் சுருக்கங்கள் காணப்படாமை

**30.** மறை பரப்பிய புனிதர்கள் சிலரின் பெயர்களும் அவர்கள் மறை பரப்பிய நாடுகளும் கீழே தரப்பட்டுள்ளன. அவற்றுள் **பொருத்தமற்ற** சோடியைத் தெரிவு செய்க.

(1) புனித கன்டபெறி அகுஸ்தினார் - இங்கிலாந்து
(2) புனித கொலம்பஸ் - ஸ்கொட்லாந்து
(3) புனித பற்றிக் - அயர்லாந்து
(4) புனித மெதோடியஸ் - ஜேர்மனி
(5) புனித அனஸ்கா - சுவீடன்



**31.** ஓவியங்கள் சிலவற்றின் பெயர்கள் கீழே தரப்பட்டுள்ளன.

A - உலக படைப்பு
B - இராப்போசனம்
C - ஊதாரி மகனின் மீள் வருகை
D - கதிரை மாதா
E - இறுதித் தீர்ப்பு

இவற்றுள் சிஸ்ரயின் தேவாலயத்தில் வரையப்பட்டுள்ள ஓவியங்களாவன

(1) A யும் B யும் (2) A யும் E யும் (3) B யும் C யும் (4) B யும் D யும் (5) D யும் E யும்

**32.** பின்வருவோருள் காது கேளாதோர், கண் பார்வையற்றோரின் நலனுக்காகப் பெரும் பங்களிப்புச் செய்தவர்

(1) அருட்பணி ரெயார்ட் டே சார்டேன்
(2) அலெக்சாண்டர் கிறஹம் பெல்
(3) சேர். ஐசாக் நியூட்டன்
(4) அல்பர்ட் அயின்ஸ்டயின்
(5) அலெக்சாண்டர் பிலெமின்

**33.** கீழே பெயர் குறிப்பிடப்பட்டவர்களைக் கருதுக.

A - ஆயர் எட்மன்ட் பீரிஸ்
B - ஆயர் சிறில் அபேநாயக்க
C - அருட்பணி S. G. பெரேரா
D - அருட்பணி பீற்றர்பிள்ளை
E - நல்லூர் சுவாமி ஞானப்பிரகாசர்

இவர்களுள் இலங்கைத் திருச்சபை வரலாற்றிற்குத் தம் எழுத்தாக்கங்களால் பெரும் பங்களிப்பு செய்தவர்கள்

(1) A, B, C (2) A, B, D (3) A, B, E (4) A, C, E (5) B, C, D

**34.** பின்வரும் கூற்றுகளைக் கருதுக.

A - சிங்கள, தமிழ் கத்தோலிக்க பாரம்பரிய இசைக்குப் பங்களிப்புச் செய்தவர்.
B - பாஸ்கு நாடகத்தின் தோற்றத்திற்கும் வளர்ச்சிக்கும் பங்களிப்புச் செய்தவர்.
C - ஆங்கில மொழியில் ஒரு நூலை மட்டும் எழுதியுள்ளார்.
D - பிரபுக்கள் குடும்பத்தைச் சேர்ந்தவர்.
E - சிங்கள, தமிழ் மொழிகளிலான கிறிஸ்தவ இலக்கியங்களுக்குப் பங்களிப்புச் செய்தவர்.

இவற்றுள் வண. யாக்கோமே கொன்சால்வேஸ் அடிகளாருடன் தொடர்புடைய கூற்றுகள்

(1) A, B, C (2) A, B, D (3) A, B, E (4) A, C, E (5) B, C, E

[பக். 5 ஐப் பார்க்க

**35.** 'கிழக்கின் திருத்தூதர்' என அறியப்படும், இந்தியா, யப்பான் ஆகிய நாடுகளில் நற்செய்தியை அறிவித்த புனிதர்
(1) புனித இன்னேசியஸ் லொயலா இஞ்ஞாசியார்
(2) புனித பிரான்சிஸ் சவேரியார்
(3) புனித யோசப்வாஸ்
(4) புனித பிரான்சிஸ் தேசேல்ஸ்
(5) புனித பிரான்சிஸ் அசிசி

**36.** புனித யோசப்வாஸ் இலங்கையில் முதல் இரண்டு வருடங்களையும் மறைந்திருந்து கழித்த இடம்
(1) யாழ்ப்பாணம் (2) ஊர்காவற்றுறை (3) மன்னார்
(4) புத்தளம் (5) கண்டி

**37.** பின்வரும் சபைகளைக் கருத்திற் கொள்க.
A - அப்போஸ்தலிக்க கார்மேல் சபை
B - பிரான்சிஸ் சவேரியர் சபை
C - திருக்குடும்பச் சபை
D - புனித சூசையப்பர் (அருட்சகோதரர்கள்) சபை
E - பிரான்சிஸ்கன் அருட்சகோதரர்கள் சபை
இவற்றுள் சுதேச மொழியில் கல்வி வழங்குவதற்காக இலங்கையிலேயே ஆரம்பிக்கப்பட்ட சபைகள்
(1) A, B, C (2) A, C, E (3) B, C, D (4) B, D, E (5) C, D, E

**38.** 1841 இல் மத்திய பாடசாலை ஆணைக்குழுவை நிறுவிய ஆளுனர்
(1) பிரட்றிக் நோத் (2) ரொபர்ட் பிரவுண்றிக்
(3) ஸ்வோட் மக்கன்சி (4) சாள்ஸ் மக்காத்தி
(5) ஜேம்ஸ் லோங்டன்

**39.** இலங்கையில் போர்த்துக்கேயரின் ஆட்சிக்காலத்தில் பிரான்சிஸ்கன் சபையினரின் கல்லூரிகள் இயங்கிய இடங்கள்
(1) கொழும்பு, கண்டி, யாழ்ப்பாணம் (2) நவகமுவ, யாழ்ப்பாணம், புத்தளம்
(3) யாழ்ப்பாணம், மன்னார், கொழும்பு (4) கொழும்பு, யாழ்ப்பாணம், நவகமுவ
(5) கொழும்பு, நவகமுவ, புத்தளம்

**40.** இலங்கையில் முதன்முதலில் கற்பித்தலுக்கு நாடக (Role-Play) முறையை அறிமுகப்படுத்திய சபை எது?
(1) பிரான்சிஸ்கன் சபை (2) இயேசு சபை (3) டொமினிக்கன் சபை
(4) அகுஸ்தினார் சபை (5) அமலமரித்தியாகிகள் சபை

**41.** மனிதர்களை நடிகர்களாகக் கொண்டு கிறிஸ்துவின் பாடுகள் இலங்கையில் முதன்முதலில் மேடையேற்றப்பட்ட இடம்
(1) தூவ (2) பிற்றிப்பன (3) மக்கொன (4) மன்னார் (5) பொரலஸ்ச

**42.** மிகப் பழமை வாய்ந்ததும், இன்றும் தொடர்ந்து வெளிவருவதுமான சிங்களச் செய்திப் பத்திரிகை எது?
(1) தினமின (2) சிலுமின (3) ஞானாத்த பிரதீபய (4) சிங்கள பௌத்தயா (5) லங்காதீப

**43.** 2004 இல் கட்டாய மதமாற்றச் சட்டம் பாராளுமன்றத்தில் சமர்ப்பிக்கப்பட்டபோது அதற்கு எதிராக உயர் நீதிமன்றம் வரை சென்று நீதியை நிலைநாட்டியவர்
(1) ஆயர் லியோ நானாயக்கார (2) ஆயர் பிராங் மார்க்கஸ் பர்னாந்து
(3) ஆயர் லக்ஸ்மன் விக்கிரமசிங்க (4) அருட்பணி மைக்கல் றொட்றிகோ
(5) அருட்பணி திஸ்ஸ பாலசூரிய

**44.** இரண்டாம் வத்திக்கான் சங்கம் வெளியிட்ட 16 ஏடுகளில் 'உலகின் சூழ்நிலை' பற்றிப் பேசும் ஏடு
(1) திருச்சபை பற்றிய ஏடு (2) இன்றைய உலகில் திருச்சபை என்னும் ஏடு
(3) திருவழிபாடு பற்றிய ஏடு (4) கிறிஸ்தவக் கல்வி பற்றிய ஏடு
(5) இறை வெளிப்பாடு பற்றிய ஏடு

**45.** பின்வருவனவற்றைக் கருதுக.
A - ஒருவர் தனது சமயத்தை நன்கு அறிந்திருத்தல்
B - ஏனைய சமயங்களின் ஏற்றுக்கொள்ளப்பட முடியாத கருத்துக்களை நிராகரித்தல்
C - ஏனைய சமயங்களைக் கற்பதும் மதிப்பளிப்பதும்
D - ஒருவர் தமது மதக் கோட்பாடுகளை மற்றயவர்கள் ஏற்கும்படி தூண்டுதல் வழங்குதல்
E - ஏனைய சமயத்தினரின் மாறுபட்ட கருத்துக்களைச் சகித்துக் கொள்ளல்
இவற்றுள் சமயங்களுக்கிடையிலான கருத்துப்பரிமாறலின் போது கடைப்பிடிக்க வேண்டிய பண்புகளாகக் கொள்ளக்கூடியன
(1) A, C, D (2) A, C, E (3) B, C, E (4) B, D, E (5) C, D, E

[பக். 6 ஐப் பார்க்க

**46.** பின்வருவனவற்றுள் ஆசிய ஆயர் பேரவையின் செயற்பாட்டுக் கோட்பாடு **அல்லாதது** எது?
(1) ஆசியா முழுவதற்கும் பொருத்தமான வழிபாட்டு முறையை உருவாக்குதல்
(2) ஒரு தன்னார்வ அமைப்பாக அங்கத்துவ நாடுகளிடையே ஒற்றுமையைக் கட்டியெழுப்புதல்
(3) அங்கத்துவ நாடுகளிடையே கூட்டுப்பொறுப்புணர்வைக் கட்டியெழுப்புதல்
(4) அங்கத்துவ நாடுகளில் முழுமனித அபிவிருத்திக்கு உதவுதல்
(5) திருச்சபை ஒற்றுமையையும் ஏனைய மதத்தவர்களுடனான நட்புறவையும் கட்டியெழுப்புதல்

**47.** யூதத் தலைமைச் சங்கத்தின் செயன்முறை பற்றிக் கூறும் நூல்
(1) இணைச்சட்ட நூல் (2) அடிப்படைகள் (3) மிஸ்னா
(4) லேவியர் ஆகமம் (5) டிடாக்கே

**48.** பின்வரும் கூற்றுகளைக் கருதுக.
A - அங்கத்துவ சபைகளிடையே கூட்டுப்பொறுப்புணர்வை ஏற்படுத்துதல்
B - ஆசியாவில் கிறிஸ்தவர்களின் எண்ணிக்கையைப் பெருக்குவதற்கான செயற்பாடுகளை முன்னெடுத்தல்
C - எல்லா கிறிஸ்தவ சபைகளையும் ஒன்றிணைத்து ஒரு சபையை உருவாக்குதல்
D - உரோமன் கத்தோலிக்க திருச்சபையும் இவாஞ்சலிக்கல் சபைகளும் உள்வாங்கப்படும் விதத்தில் திட்டங்களை மேற்கொள்ளல்
E - கடந்த காலத்தில் பிரிந்து சென்ற திருச்சபைகளை மீண்டும் இணைத்துக் கொள்ளல்

இவற்றுள் ஆசிய கிறிஸ்தவ சம்மேளனத்தின் செயற்பாடுகள் பற்றிய கூற்றுக்கள்
(1) A, B, C (2) A, B, D (3) A, D, E (4) B, C, D (5) C, D, E

**49.** பின்வருவனவற்றுள் ஒல்லாந்த கல்வி முறையில் **உள்ளடங்காத** விடயம்,
(1) சுதேசிகளைத் தங்கள் மதத்திற்கு மதமாற்றம் செய்தல்
(2) கல்விச் செயற்பாடுகளுக்கான செலவை கிழக்கிந்தியக் கம்பனியினர் ஏற்றுக் கொள்ளல்
(3) குறைந்த செலவிலான கல்வி வழங்கும் முறைமைகளை ஒழுங்கு செய்தல்
(4) மூன்று முக்கிய நகரங்களில் உயர் கல்வி நிறுவனங்களை நிறுவுதல்
(5) நான்கு வகையான பாடசாலைகளை நடாத்துதல்

**50.** இரண்டாம் வத்திக்கான் சங்கம் எக்காலப்பகுதியில் இடம்பெற்றது?
(1) 1962 - 1963 (2) 1962 - 1964 (3) 1963 - 1964 (4) 1962 - 1965 (5) 1962 - 1972

* * *

AL/2016/49/T-II





අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2016 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2016 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2016

ක්‍රිස්තියානි ශිෂ්ටාචාරය II
கிறிஸ்தவ நாகரிகம் II
Christian Civilization II

49 T II

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
Three hours

**அறிவுறுத்தல்கள் :**

* பகுதி **I** இல் எவையேனும் **இரண்டு** வினாக்களையும் பகுதி **II** இல் எவையேனும் **மூன்று** வினாக்களையும் தெரிவுசெய்து, எல்லாமாக **ஐந்து** வினாக்களுக்கு விடை எழுதுக.
* ஒவ்வொரு வினாவுக்கும் **20** புள்ளிகள் உரித்தாகும்.

## பகுதி I

**1.** (i) இயேசுவின் காலத்தில் பலஸ்தீனாவின் யூத இல்லங்களில் காணப்பட்ட **நான்கு** பண்புகளைத் தருக.
(ii) இயேசுவின் காலத்தில் பலஸ்தீனாவில் வாழ்ந்த யூத உயர் குலத்தோரின் வாழ்க்கை முறைகள் பற்றிய **நான்கு** விடயங்களைக் குறிப்பிடுக.
(iii) இயேசுவின் காலத்தில் பலஸ்தீனாவில் வாழ்ந்த வரிதண்டுவோரிடம் காணப்பட்ட **நான்கு** குண இயல்புகளை எழுதுக.
(iv) இயேசுவின் காலத்தில் பலஸ்தீனப் பெண்களின் வாழ்க்கைப் பண்புகள் பற்றிய **நான்கு** விடயங்களைக் குறிப்பிடுக.
(v) இயேசுவின் காலத்து சமாரியரின் வாழ்க்கைப் பண்புகள் **நான்கை** விபரிக்குக.

**2.** (i) யூத கலாசாரத்தில் செல்வாக்குச் செலுத்திய கிரேக்கக் கலாசாரப் பண்புகள் **நான்கினை** எழுதுக.
(ii) புனித தோமஸ் அக்குவினஸின் **நான்கு** படிப்பினைகளைத் தருக.
(iii) கிறிஸ்தவத்தில் செல்வாக்குச் செலுத்திய உரோம வழிபாட்டு மரபுகள் **நான்கினை** எழுதுக.
(iv) புனித அம்புறோசியார் திருச்சபைக்கு ஆற்றிய **நான்கு** பங்களிப்புக்களைச் சுருக்கமாக விளக்குக.
(v) இலத்தீன் மொழியின் சிறப்பான பண்புகள் **நான்கினை** விபரிக்குக.

**3.** (i) இரவலர் சபைகளின் வாழ்க்கை முறைகள் பற்றிய **நான்கு** விசேட அம்சங்களைத் தருக.
(ii) புரட்டஸ்தாந்து சீர்திருத்தத்தை ஏற்படுத்துவதற்குக் காரணமாயிருந்த **நால்வரைப்** பெயரிடுக.
(iii) புரட்டஸ்தாந்து சீர்திருத்தத்தின் பின்பு ஐரோப்பாவில் தோன்றிய **நான்கு** துறவற சபைகளைப் பெயரிடுக.
(iv) புரட்டஸ்தாந்து சீர்திருத்தம் காரணமாகத் திருச்சபை பெற்றுக்கொண்ட **நான்கு** நன்மைகளைக் குறிப்பிடுக.
(v) ஐரோப்பிய மிசனறிமார் வெளிநாடுகளில் ஆற்றிய **நான்கு** சேவைகளைச் சுருக்கமாக விளக்குக.

## பகுதி II

**4.** புனித பவுலின் திருமுகங்கள் ஆரம்பகாலக் கிறிஸ்தவத்தின் அடிப்படைப் படிப்பினைகள் சிலவற்றைத் தன்னகத்தே கொண்டுள்ளன.
(i) ‘அருள்’ பற்றிய பவுலின் படிப்பினைகள் யாவை?
(ii) பவுலின் திருமுகத்தில் கிறிஸ்துவின் தாழ்ச்சி பற்றிக் குறிப்பிடும் முக்கிய கருத்துக்களை விளக்குக.
(iii) ‘இறந்தோரின் உயிர்ப்பு’ பற்றிய பவுலின் படிப்பினைகளை விபரிக்குக.
(iv) பவுலின் திருமுகங்களில் காணப்படும் கிறிஸ்துவின் இரண்டாம் வருகை பற்றிய விடயங்களை விளக்குக.

**5.** அயலவரை அன்பு செய்வது கிறிஸ்தவத்தில் கட்டாயமாக நடைமுறைப்படுத்தப்பட வேண்டிய விடயமாகும்.
(i) ஆரம்பகாலக் கிறிஸ்தவ சமூகம் சகோதரத்துவ அன்பு தொடர்பில் செயற்பட்ட விதத்தை விளக்குக.
(ii) சகோதரத்துவ அன்பு பற்றி புனித யாக்கோபுவின் படிப்பினையை விவரிக்குக.
(iii) உலகில் ஏற்படும் வன்முறைச் சூழலின்போது ஒரு கிறிஸ்தவர் எவ்வாறு செயற்பட வேண்டுமென விளக்குக.
(iv) சமாதானமும் கூட்டொருமைப்பாடும் பற்றிய இரண்டாம் வத்திக்கான் சங்கத்தின் படிப்பினைகளை விளக்குக.

[பக். 2 ஐப் பார்க்க

**6.** ஒரு நபரின் குறிப்பிட்ட சூழலில் நற்செய்தி பண்பாட்டு மயப்படுத்தப்படுவதில் அச்சூழலின் சுதேச கலாசாரம் முக்கிய வகிபங்கினை ஆற்றுகிறது.

(i) கிறிஸ்து எவ்வாறு தமது சமூகத்துடன் தம்மை ஒன்றுபடுத்தி இணைத்துக் கொண்டார் என்பதனை விளக்குக.

(ii) கிறிஸ்தவ கலாசார உருவாக்கத்தில் உரோமைய கலாசாரப் பண்புகள் செல்வாக்குச் செலுத்திய விதத்தை விளக்குக.

(iii) கோதிக், உரோமைய கட்டடக்கலை அமைப்பு முறைகள் என்பன பற்றிச் சுருக்கமாக விவரிக்குக.

(iv) கிறிஸ்தவ கலாசாரமும் இலங்கையின் சுதேச கலாசாரமும் ஒன்று மற்றையதின் வளர்ச்சிக்கு அன்னியோன்னியமாக உதவியுள்ள விதத்தை விவரிக்குக.

**7.** சமூக மேம்பாட்டைக் கருத்திற்கொண்டு கல்வி, அறிவியல் ஆகியவற்றின் வளர்ச்சிக்குத் திருச்சபை பங்களிப்புச் செய்து வருகிறது.

(i) புனித அகுஸ்தீனார் தமது காலத்து கத்தோலிக்க இறையியற் கல்விக்கு வழங்கிய பங்களிப்பை விவரிக்குக.

(ii) புனித அகுஸ்தீனாரின் ஆக்கங்களிலிருந்து இன்றைய சமூகம் எவ்வாறான படிப்பினைகளைப் பெற்றுக்கொள்ளலாம் என்பது பற்றி விளக்குக.

(iii) ஒல்லாந்தர் ஆட்சிக்காலத்தில் வழக்கிலிருந்த செமினறிப் பாடசாலைகள் இலங்கையின் கல்வி வளர்ச்சிக்குப் பங்களிப்பு வழங்கிய விதத்தை விளக்குக.

(iv) அரசின் கல்வி அமைப்புக்களுடன் திருச்சபை இணைந்து செயற்படுவதனால் ஏற்படும் சாதக, பாதக விளைவுகளை விவரிக்குக.

**8.** இலங்கைத் திருச்சபையானது மனிதாபிமான மற்றும் மனித உரிமை விடயங்களில் பங்களிப்பு வழங்குவதனூடாக மனிதநேய வளர்ச்சிக்குத் தேசியரீதியில் பங்களிப்புச் செய்கின்றது.

(i) லேவியர் ஆகமம், விடுதலைப் பயண நூல், மத்தேயு நற்செய்தி ஆகிய நூல்களிலிருந்து மேற்கோள்காட்டி சமூக நீதி, பிறரன்புச் செயல்கள் என்பன பற்றி விவரிக்குக.

(ii) இலங்கையில் திருச்சபை இன்று மேற்கொண்டு வரும் மனித நேயப் பணிகளை குறிப்பிடுக.

(iii) தற்கால இலங்கையில் சமூக நீதி தொடர்பில் திருச்சபையின் கவனம் செலுத்தப்பட வேண்டிய துறைகள் பற்றி விவரிக்குக.

(iv) "இலங்கைத் திருச்சபை பல்வேறு இனங்கள், சமயங்கள், சமூகக் குழுக்கள் ஆகியவற்றின் சம உரிமைக்கும் நீதிக்கும் குரல் கொடுத்துள்ளது." விளக்குக.

❋ ❋ ❋